वयं पठाम—நாங்கள் எல்லோரும் படிக்க வேண்டும்.

त्वं पठ—நீ படி.

युवां पठतं—நீங்கள் இருவரும் படியுங்கள்.

यूयं पठत—நீங்கள் எல்லோரும் படியுங்கள்.

सः-सा-तत् पठतु—அவன்-அவள்-அது படிக்கட்டும்.

तौ-ते-ते पठतां—அவர்கள் இருவரும்-அவைகள் இரண்டும் படிக்கட்டும்.

ते-ताः-तानि पठन्तु—அவர்கள் எல்லோரும்-அவை எல்லாம் படிக்கட்டும்.

இதுபோல்

| | | |
|---|---|---|
| पश्यानि | पश्याव | पश्याम |
| लिखानि | लिखाव | लिखाम |
| वसानि | वसाव | वसाम |
| गच्छानि | गच्छाव | गच्छाम |
| चराणि | चराव | चराम |

போன்ற வினைச்சொற்களைக் கொண்டு வாக்கியங்கள் அமைக்கலாம்.

1. राम त्वं पठ।
   ராம! நீ படி.

2. बालौ ! युवां पुष्पाणि पश्यतम्।
   இரு சிறுவர்களே! நீங்கள் இருவரும் பூக்களைப் பாருங்கள்.

3. वीराः ! यूयं सीमान्तं रक्षत।
   வீரர்களே! நீங்கள் எல்லோரும் எல்லைப் புறங்களைக் காப்பாற்றுங்கள்.

ஸம்போதனப் ப்ரதமையில்

| | | |
|---|---|---|
| राम | रामौ | रामाः |
| रमे | रमे | रमाः |
| वन | वने | वनानि |
| हरे | हरी | हरयः |
| मते | मत्यौ | मतयः |
| नदि | नद्यौ | नद्यः |
| जननि | जनन्यौ | जनन्यः |
| श्रीः | श्रियौ | श्रियः |
| वारि-वारे | वारिणी | वारीणि |
| दधि-दधे | दधिनी | दधीनि |
| शंभो | शंभू | शंभवः |
| धेनो | धेनू | धेनवः |
| वधूः | वध्वौ | वध्वः |

பொதுவாக ஸர்வநாம சப்தங்களுக்கு ஸம்போதனப் ப்ரதமையல் வழக்கு இல்லை. सर्व சப்தத்திற்கு மட்டும் சில விடங்களில் உண்டு. सर्व सर्वौ (सर्वे सर्वे) सर्वे (सर्वाः सर्वाणि)

## चतुस्त्रिंशः पाठः- பாடம் 34

## வாக்கிய அமைப்பு (1)

எளிதான சில வாக்கிய அமைப்புகள் பயிற்சிக்காகத் தரப்படுகின்றன.

अस्ति स्तः सन्ति *பிரதம புருஷன்*

असि स्थः स्थ *மத்யம புருஷன்*

अस्मि स्वः स्मः *உத்தம புருஷன்*

अस्ति *இருக்கிறான்* असि *இருக்கிறாய்* अस्मि *இருக்கிறேன்*

सः कुत्र अस्ति? *அவன் எங்கு இருக்கிறான்?*

त्वं कुत्र असि? *நீ எங்கு இருக்கிறாய்?*

अहं कुत्र अस्मि? *நான் எங்கு இருக்கிறேன்?*

ते तत्र न सन्ति । *அவர்கள் அங்கு இல்லை.*

यूयं कुत्र स्थ? *நீங்கள் எங்கு இருக்கிறீர்கள்?*

वयं अत्र न स्मः । *நாங்கள் இங்கு இல்லை.*

सः किं हसति? *அவன் சிரிக்கிறானா?*

त्वं किमर्थं हससि? *நீ எதற்குச் சிரிக்கிறாய்?*

युवां वृथा हसथः । *நீங்கள் (இருவரும்) வீணாகச் சிரிக்கிறீர்கள்.*

अहं गुरुं नमामि । *நான் ஆசிரியரை வணங்குகிறேன்.*

वयं देवं नमामः । *நாம் தேவனை வணங்குகிறோம்.*

सुप्रभातं रमेश! *ரமேச ! நற்காலை* (Good morning)

भो आर्य ! सुदिनम् । *ஐயா! நல்லநாள்.* (Good day)

अन्तः आगच्छ । *உள்ளே வா.*

कुतः बहिः तिष्ठसि? *ஏன் வெளியே நிற்கிறாய்?*

अपि कुशलम्? *ஸௌக்கியமா?*

आं, सर्वत्र कुशलम् । *ஆம், எங்கும் ஸௌக்கியம்?*

कुत्र वससि? *எங்கு வசிக்கிறாய்?*

मित्रस्य गृहे । *நண்பனின் வீட்டில்.*

प्रातराशः सज्जः । *காலையுணவு தயார்.*

आगच्छ । सह खादावः । *வா, சேர்ந்து (இருவரும்) சாப்பிடுவோம்*

इदं वार्तापत्रं पठ । *இந்த செய்தித்தாளைப் படி.*

अहं शीघ्रं आगच्छामि । *நான் சீக்கிரம் வருகிறேன்.*

चतुष्पदे सुखं उपविश । *நாற்காலியில் சுகமாக உட்கார்.*

अहं अन्तः गच्छामि । *நான் உள்ளே போகிறேன்.*

सः तत्र तिष्ठतु । *அவன் அங்கு இருக்கட்டும்.*

इदानीं का वेला? *இப்போது என்ன நேரம்?*

प्रातः सप्तमी होरा । *காலை ஏழு மணி.*

सः विलंबं करोति । *அவன் காலதாமதம் செய்கிறான்.*

त्वं विलंबं मा कुरु । *நீ காலதாமதத்தைச் செய்யாதே.*

पुनः मिलामः । *மறுபடி சந்திப்போம்.*

अभिवादये । *வணங்குகிறேன்.*

आपृच्छे । *விடைபெறுகிறேன்.*

उपाहारगृहं कुत्र वर्तते? *சிற்றுண்டிச்சாலை எங்கு உள்ளது?*

उपाहारगृहं समीपे एव वर्तते । *சிற்றுண்டிச்சாலை அருகிலேயே உள்ளது.*

त्वं कुत्र गच्छसि? *நீ எங்கு செல்கிறாய்?*

अहं क्रीडाङ्गणं गच्छामि । *நான் விளையாட்டுத்திடலுக்குச் செல்கிறேன்.*

कृपया क्षमस्व । *தயைசெய்து பொறுத்துக்கொள்.*

अहं क्षन्तव्यः । *நான் மன்னிக்கத்தக்கவன்.*

चिन्ता मा अस्तु । *கவலை வேண்டாம்.*

मा शुचः । *வருந்தாதே.* कथं वर्तसे? *எப்படி இருக்கிறாய்?*

आर्य ! वन्दे । *ஐயா ! வணங்குகிறேன்.*

आर्ये ! नमस्ते । *அம்மையே ! வணக்கம்.*

महाशय ! कुत आगच्छसि । பெரியவரே ! எங்கிருந்து வருகிறீர்.

महाशये । अहं तञ्जापुरात् आगच्छामि । அம்மையே ! நான் தஞ்சையிலிருந்து வருகிறேன்.

आर्य ! सुसायमहः । நல்ல மாலை ஐயா ! (Good evening)

महोदय ! सुरात्रिः । நல்லிரவு ஐயா ! (Good night)

धन्यः अस्मि । (धन्योऽस्मि) - கொடுத்துவைத்தவனாக இருக்கிறேன்.

धन्या अस्मि । கொடுத்துவைத்தவளாக இருக்கிறேன்.

कृतज्ञः अस्मि நன்றியறிபவனாக இருக்கிறேன.

कृतज्ञा अस्मि நன்றியறிபவளாக இருக்கிறேன்.

अनुगृहीतः अस्मि - अनुगृहीतोऽस्मि । அன்புடன் ஏற்கப் பட்டவனாக இருக்கிறேன். (பெரியோர்களிட மிருந்து நன்மை பெறும்போது)

शिवः मार्गः भवतु । - शिवो मार्गो भवतु । शिवाः ते पन्थानः सन्तु । நல்வழி அமையட்டும்

ते यात्रा निर्विघ्ना भवतु । உன் பயணம் இடையூறற்றதாக இருக்கட்டும்.

सुकृतं अस्तु । அதிருஷ்டம் உண்டாகட்டும்.

शुभं अस्तु/स्वस्ति अस्तु । மங்களம் உண்டாகட்டும்.

विजय ! कुतः आगच्छसि । விஜய ! எங்கிருந்து வருகிறாய்.

मैथिलि ! विद्याशालातः । மைதிலி ! பள்ளிக்கூடத்திலிருந்து.

विजय ! तव हस्ते घटी अस्ति वा? விஜய ! உன் கையில் கடிகாரம் உள்ளதா?

कति होराः गताः? எத்தனை மணி ஆயிற்று?

इदानीं समयः कः? இப்போது என்ன நேரம்?

सायं पञ्चमहोरातः परं पञ्च निमेषाः । மாலை ஐந்து மணிக்குப்பின் ஐந்து நிமிஷங்கள்.

मध्याह्ने द्वादशहोरातः पूर्वं विंशतिः निमेषाः । *நடுப்பகல் 12 மணிக்கு முன் 20 நிமிஷங்கள்.*

खेलाङ्गणं गतः किम्? *விளையாடுமிடத்திற்குச் சென்றிருந்தாயா?*

नहि । श्वः परीक्षा । *இல்லை. நாளை பரீக்ஷை.*

व्यायामं करोषि किम्? *உடற்பயிற்சி செய்கிறுயா?*

प्रतिदिनं सायं व्यायामं करोमि । *தினமும் மாலையில் உடற்பயிற்சி செய்கிறேன்.*

किं तुभ्यं व्यायामः रोचते? *உனக்கு உடற்பயிற்சி பிடித்துள்ளதா?*

क्रीडातः व्यायामं रोचये । *விளையாட்டைவிட உடற்பயிற்சியை விரும்புகிறேன்.*

कदा तव विरामः? *உனக்கு எப்போது விடுமுறை?*

वर्षारम्भात् । *வருஷப்பிறப்பிலிருந்து.*

कति दिनानि यावत् विरामः? *எத்தனை நாட்கள்வரை விடுமுறை?*

दश दिनानि यावत् । *பத்து நாட்கள் வரை.*

विरामं कथं नयसि? *விடுமுறையை எப்படிக் கழிக்கிறுய்?*

अग्रे परीक्षा आगच्छति । *மேல் (தொடர்ந்து) பரீக்ஷை வருகிறது.*

ततः पठन् अस्मि । *அதனுல் படித்துக் கொண்டு இருக்கிறேன்.*

नीचैः तिष्ठ । *கீழே நில்.*

उच्चैः आरोह । *மேலே ஏறு.*

बहिः मा गच्छ । *வெளியே செல்லாதே.*

शनैः शनैः चल । *மெள்ள மெள்ள நட.*

मन्दं मन्दं कुरु । *மெள்ள மெள்ளச் செய்.*

शीघ्रं चल । *வேகமாக நட*

तत्र मा गच्छ । *அங்கு போகாதே.*

सर्वत्र मा विचर । *எங்கும் சுற்றிக் கொண்டிருக்காதே.*

एकत्र एव तिष्ठ । *ஓரிடத்திலேயே நில்.*

सः यत्र कुत्र अपि गच्छति । *அவன் எங்கெங்கோ செல்கிறுன்.*

## पञ्चत्रिंशः पाठः பாடம் 35

### வாக்கிய அமைப்பு (2)

தமிழில் மொழிபெயர்க்கும்போது சில மாறுபாடுகள் தவிர்க்க முடியாதவை. ஒவ்வொரு மொழிக்கும் தனித்தனிச் சொல்லாட்சி உண்டு. ராமன் வீட்டிற்குச் செல்கிறான் என்ற தமிழ் வாக்கியத்தை ஸம்ஸ்கிருதத்தில் **रामः गृहं गच्छति** என்று சொல்வோம். இது அந்தந்த மொழிவழி. இதில் குற்றம் காண்பதற்கில்லை. **गृहं गच्छति** என்பதில் **गृहं** என்பதை இரண்டாம் விபக்தியில் அமைந்ததாக அறிந்துகொண்டே தமிழில் வீட்டிற்கு என்று மொழிபெயர்க்கிறோம்.

**पद्यां अनुसर** । நடைவழியைப் பின்பற்று.

**जलं स्पृश** । நீரைத் தொடு.

**पादौ क्षालय** । கால்களை அலம்பு.

**सोपानं आरोह** । படியில் ஏறு.

**धर्मं चर** । அறச்செயலைச் செய்

**शतं जीव** । நூறு ஆண்டுகள் வாழ்வாய்.

**दीर्घायुः भव** । நீண்ட ஆயுளுள்ளவனாக இரு.

**शुभं आचर** । மங்களமான செயலைச் செய்

**अशुभं त्यज** । அமங்களச் செயலை விட்டுவிடு.

**भद्रं पश्य** । மங்களமானதைப் பார்.

**भद्रं शृणु** । மங்களமானதைக் கேள்.

**भद्रं वद** । நல்லதைப் பேசு. **अभद्रं मा वद** நல்லதல்லாததைப் பேசாதே.

**पाठशालां प्रविश** । பள்ளிக்கூடத் (தை) தில் நுழை.

**गर्वं त्यज** । செருக்கை விடு.

**विनयं दर्शय** । அடக்கத்தைக் காட்டு.

गृहं गच्छ । வீட்டை அடைவாய், வீட்டிற்குச் செல்வாய்.
पुस्तकं पठ । புஸ்தகத்தைப் படி
पत्रं लिख । கடிதத்தை எழுது.
फलं खाद । பழத்தைச் சாப்பிடு.
दुग्धं पिब । பாலைக் குடி
एकाकी नदीं मा गच्छ । தனித்தவனாக ஆற்றுக்குச் செல்லாதே.
सत्यं वद । உண்மையைப் பேசு.
पुष्पं जिघ्र । பூவை முகர்வாய்.
अत्र तं न आनय । இங்கு அவனை அழைத்துவராதே
तत्र एव तं नय । அங்கேயே அவனை அழைத்துச் செல்
पुस्तकं गृहं नय । புஸ்தகத்தை வீட்டிற்கு எடுத்துச் செல்
मोहनः गृहं प्रविशति । மோஹன் வீட்டில் நுழைகிறான்.
सः कवाटं पिदधाति । அவன் கதவை மூடுகிறான்
त्वं अर्गलं निधेहि । நீ தாழ்ப்பாளைப் போடு
सः मार्गं रुणद्धि । அவன் பாதையை அடைக்கிறான்
राजुः तत्र पुस्तकं पठति । ராஜு அங்கே புத்தகத்தைப்படிக்கிறான்
सीता जलं गृहं आनयति । சீதை நீரை வீட்டிற்கு கொணர்கிறாள்
हरिः फलं तत्र नयति ।
ஹரி பழத்தை அங்கு கொண்டு செல்கிறான்
यः अनृतं वदति सः दुःखं अनुभवति । எவன் பொய் சொல்கிறானோ அவன் துக்கத்தை அனுபவிக்கிறான்
रामः सदा ऋतं आचरति ।
ராமன் எப்போதும் நேர்மையைக் கடைபிடிக்கிறான்
सः सत्यं भाषते । அவன் உண்மையைப் பேசுகிறான்,
राधा सत्यं वदति । असत्यं न वदति ।
ராதா உண்மை பேசுகிறாள். பொய்யைச் சொல்வதில்லை.
हरिः क्षेत्रं पालयति, ततः तत्र वसति ।
ஹரி வயலைப் பாதுகாக்கிறான், அதனால் அங்கு குடியிருக்கிறான்

बालः सदा क्रीडति । சிறுவன் எப்போதும் விளையாடுகிறான்.
इदं जलं अशुचि, ततः एतत् मा स्पृश । இந்த நீர் தூய்மையில்லாதது. அதனால் இதைத் தொடாதே.
राम ! त्वं कुत्र गच्छसि? ராமு ! நீ எங்கு செல்கிறாய்?
वांसो ! अहं क्रीडाङ्गणं गच्छामि ।
வாஸு ! நான் விளையாட்டுத்திடலுக்குச் செல்கிறேன்
अश्वः किं खादति? किं पिबति?
குதிரை எதனைத் தின்கிறது? எதனைக் குடிக்கிறது?
अश्वः घासं खादति, निर्मलं जलं पिबति । குதிரை புல்லுணவைத் தின்கிறது, அழுக்கற்ற நீரைக் குடிக்கிறது.
गजः किं खादति? யானை எதனைத் தின்கிறது?
गजः अन्नं फलानि नारिकेलपत्राणि च खादति । யானை சாதத்தையும் பழங்களையும் தென்னை ஓலைகளையும் தின்கிறது.
त्वं यानं आरोह । நீ வண்டியில் ஏறு.
एतत् महायानं पत्तनं गच्छति । இந்தப் பேருந்து நகரத்துக்குச் செல்கிறது.
एतत् यानं स्वयं गच्छति । இந்த வண்டி தானே செல்கிறது.
आचार्यः बालं प्रश्नं पृच्छति । ஆசிரியர் சிறுவனை கேள்வியைக் கேட்கிறார்.
त्वं प्रश्नं पृच्छ । நீ கேள்வியைக் கேள்
अहं अनुपदं उत्तरं वदामि । நான் உடனே விடையைக் கூறுகிறேன்
रथं पश्यामि । தேரைப் பார்க்கிறேன்
वाहनं आरोहामि । வாஹனத்தில் ஏறுகிறேன்.
जननी अन्नं पचति । தாயார் உணவைச் சமைக்கிறாள்
अहं संस्कृतं वदामि நான் ஸம்ஸ்கிருத மொழியைப் பேசுகிறேன்
त्वं भोजनं स्वीकुरु । நீ உணவை ஏற்பாய்.
आचारः सुखं ददाति । நன்னடத்தை இன்பத்தைத் தருகிறது.

धनं विना नरः न प्रकाशते । பணமின்றி மனிதன் பிரகாசிப்பதில்லை.
जलं विना पद्मं न रोहति । நீரின்றி தாமரை முளைப்பதில்லை
मां विना पुत्रः न गच्छति । என்னைவிட்டு பிள்ளை செல்கிறதில்லை.
जलं ऋते नरः न जीवति । நீரின்றி மனிதன் வாழ்கிறதில்லை.
रविं नम । ஸூரியனை வணங்கு
रामुं व्याधिः पीडयति । ராமுவை நோய் துன்புறுத்துகிறது.
स्तेनः धनं चोरयति । திருடன் பொருளைத் திருடுகிறான்.
कपिः वृक्षं आरोहति । குரங்கு மரத்தை (தில்) ஏறுகிறது
अग्निः पलालं दहति । நெருப்பு கூளத்தை எரிக்கிறது
नृपतिः शत्रुं जयति । அரசன் எதிரியை வெல்கிறான்
अतिथिः गृहं आगच्छति । அதிதி வீட்டை (நோக்கி) வருகிறான்
अहं सूर्यं वन्दे । நான் ஸூரியனை வணங்குகிறேன்
रामः कुसुमं क्रीणाति । ராமன் பூவை வாங்குகிறான்
सिंहः हरिणं हन्ति । சிங்கம் மானைக் கொல்கிறது
शिक्षकः देहव्यायामं बोधयति । பயிற்சியாளர் உடற்பயிற்சியைக் கற்றுத்தருகிறார்
बुधः असत्यं न वदति । அறிவாளி பொய் பேசுகிறதில்லை
अहं नारिकेलोदकं पिबामि । நான் இளநீர் குடிக்கிறேன்
व्याघ्रः मांसं खादति । புலி மாமிசத்தைச் கடித்துச் சாப்பிடுகிறது
बालकः शष्कुलीं भक्षयति । சிறுவன் முறுக்கை மென்று சாப்பிடுகிறான்.
सः घृतं लिहति । அவன் நெய்யை நக்கிச் சாப்பிடுகிறான்.
गजः जलं चूषति । யானை நீரை உறுஞ்சிக் குடிக்கிறது.
बिडालः क्षीरं लिहति । பூனை பாலை நக்கிக் குடிக்கிறது.
साधुः कदलीफलं अत्ति । ஸாது வாழைப்பழத்தைச் சாப்பிடுகிறார்.
जनकः पुत्रं क्षाम्यति । தந்தை பிள்ளையைப் பொறுத்துக் கொள்கிறார்.

कण्टकः पादं विध्यति । முள் காலைக் குத்துகிறது
भृत्यः भारं वहति । பணியாளன் சுமையைச் சுமக்கிறான்
मूर्खः बुधं निन्दति । முட்டாள் அறிவாளியை ஏசுகிறான்
कृषकः धान्यं वपति । உழவன் தானியத்தை விதைக்கிறான்
कृषीवलः क्षेत्रं कृषति । உழவன் நிலத்தை உழுகிறான்
इदं मधुरं दुग्धम्, इदं पिब । இது இனிய பால், இதைக்குடி,
इदं रम्यं आभरणं, इदं धारय । இது அழகிய அணி, இதை அணிந்துகொள்.
इमे मधुराः शालयः, इमान् पच । இவை இனிய அரிசி, இவற்றைச் சமைப்பாய்.
राहुः सूर्यं ग्रसते । ராகு சூரியனை விழுங்குகிறான்.
दुःखं मां बाधते । துன்பம் என்னை வாட்டுகிறது.
कपिः गिरिं लङ्घते । குரங்கு மலையைத் தாண்டுகிறது.
पापं कर्म दुःखं ददाति । பாபச்செயல் துன்பத்தைத் தருகிறது.
शिष्यः गुरुं अनुचरति । சிஷ்யன் குருவை ஒட்டிச் செல்கிறான்.
बालः पितरं अनुसरति । சிறுவன் தந்தையைப் பின்பற்றுகிறான்.
सीता रामं अनुवदति । ஸீதை ராமனை ஒட்டிப் பேசுகிறாள்.
नृपः राज्यं अधिकरोति । அரசன் அரசை ஆள்கிறான்.
विद्या ज्ञानं दीपयति । கல்வி அறிவைத் தூண்டுகிறது.
कन्या शरीरं अलङ्करोति । பெண் உடலை அழகுபடுத்துகிறாள்.
विज्ञानी विमानं आविष्करोति । விஞ்ஞானி விமானத்தைப் புதிதாகத் தோற்றுவிக்கிறார்.
यतिः धनं न स्वीकरोति துறவி பொருளை ஏற்கிறதில்லை.
रामुः गोपालं अनुकरोति । ராமன் கோபாலனை ஒத்திருக்கிறான்.
विद्वान् छलं परिहरति । அறிவாளி சூதைத் தவிர்க்கிறான்.
साधुः सत्यं व्याहरति । ஸாது உண்மையைப் பேசுகிறார்.
पत्नी पतिं अनुनयति । மனைவி கணவனை சமாதானப்படுத்துகிறாள்.

**रामः सीतां परिणयति ।** ராமன் ஸீதையை மணக்கிறான்.

**कम्बः रामायणं प्रणयति ।** கம்பன் ராமாயணத்தை வெளிக்கொணர்கிறார்.

**लक्ष्मणः शत्रुं अपनयति ।** லக்ஷ்மணன் எதிரியை அப்புறப்படுத்துகிறான்.

**पिता पुत्रं उपनयति ।** தந்தை மகனை அருகில் சேர்க்கிறார்.

**गुरुः शिष्यं विनयति ।** குரு சீடனைப் பழக்குகிறார்.

**नीतिपतिः न्यायं निर्णयति ।** நீதிபதி நியாயத்தை நிர்ணயிக்கிறார்.

**विश्वनाथः गुरुं सेवते ।** விசுவநாதன் குருவை (விற்கு) பணிவிடை செய்கிறான்.

**सिंहः वनं गाहते ।** சிங்கம் காட்டை (டினுள்) நுழைகிறது.

**छात्रः तटाकं गाहते ।** மாணவன் குளத்தை (தினுள்) நுழைகிறான் -

**मेधावी दुःखं सहते ।** அறிவாளி துன்பத்தைப் பொறுத்துக் கொள்கிறான்.

**त्वं फलानि वितर ।** நீ பழங்களை வழங்கு.

**अहं नदीं तरामि ।** நான் ஆற்றைக் கடக்கிறேன்.

**गिरिं निकषा कपयः चरन्ति ।** மலையை ஒட்டிக் குரங்குகள் செல்கின்றன.

**अजः तृणं चरति ।** ஆடு புல்லை அசைபோட்டுத் தின்கிறது.

**नृपः दुर्जनं शतं दण्डयति ।** அரசன் துஷ்டனை நூறு ரூபாய் தண்டிக்கிறான்.

**तण्डुलान् ओदनं पचति ।** அரிசியை சாதமாகச் சமைக்கிறாள்.

1-2 விபக்திகளில் வரும் சொற்களைக்கொண்டு வாக்கியங்கள் அமைத்துத் தந்தோம். அவற்றில் தொடர்ந்து மேலும் வாக்கியங்களைத் தருகிறோம். இவற்றில் சில பழக்கமில்லாத சொற்களுக்கு மட்டும் பொருள் தருகிறோம். நீங்களே கவனித்துத் தமிழில் பொருள் தரவும்.

इदं पत्रं तत्र नय । तत् फलं इह आनय ।
रामः इह तिष्ठति । कृष्णः तत्र वसति ।
अत्र एव त्वं वससि । रामः सदा अटति ।
मन्दं मन्दं सा चलति । एषा शीघ्रं गच्छति ।
मोहनः द्रुतं धावति । कृष्णः मन्दं धावति ।
सा सत्यं वदति । एषः अनृतं सदा वदति ।
सः गृहं एव आगच्छति, वनं न गच्छति ।
एषा क्षीरं एव पिबति, अन्नं न खादति ।
गुरुः प्रश्नं पृच्छति । शिष्यः उत्तरं यच्छति ।
अहं सत्यं व्याहरामि, अनृतं न वदामि ।
तौ क्षीरं पिबतः, फलं खादतः, बहिः चरतः च ।
बालं गृहं नय । सः रोदिति ।
बालं प्रश्नं पृच्छामि । सः उत्तरं वदति ।

अटति *சுற்றுகிறான்.*
मन्दं मन्दं *மெள்ள.*
प्रश्नः *கேள்வி*
उत्तरं *விடை,*
पृच्छति *கேட்கிறான்*
द्रुतं, शीघ्रं *வேகமாக.*
व्याहरामि *பேசுகிறேன்.*
रोदिति *அழுகிறான்.*

## षट्त्रिंशः पाठः பாடம் 36

## त्वं - भवान् - நீ, நீர், நீங்கள்

त्वं - நீ, நீர், என்று இரண்டு பொருள்களும் கொண்டது. தன்னைவிடத் தாழ்ந்தவனையும் இகழத்தக்கவனையும் त्वं எனலாம். பாராட்டத் தக்கவனையும், செல்வத்தாலோ பெருமையாலோ உயர் நிலையில் உள்ளவனையும் त्वं எனலாம். ஆண்டவனையே त्वं என்பர். இடத்திற்கேற்ற பொருள்பெறும். त्वं ஐ உபயோகிக்கும்போது மத்யமபுருஷத்தில் வினைச் சொற்கள் வரும். त्वं वससि, त्वं पठ என்றவாறு. ஆண்பாலிலோ பெண்பாலிலோ இது வேறுபடாது. ஆனால் நீர் நீங்கள் என்று ஒரு ஆணைக் குறிப்பிடும்போது भवान् என்றும் குறிப்பிடுவர். பெண்ணைக் குறிப்பிடும்போது भवती என்றும் குறிப்பிடுவர். பின்னர் தகாராந்தச் சொற்கள் வருமிடத்தில் இதனைக் காணலாம். ஆனால் भवान् அல்லது भवती யைப் பயன்படுத்தும்போது முன்னிலை (மத்யமபுருஷன்) யில் வினைச் சொற்களைப் பயன்படுத்தக்கூடாது. பிரதமபுருஷனில் படர்க்கையில் தான் வினைச் சொற்களை அமைக்க வேண்டும். தமிழில் பொருள் கூறும் போது மட்டும் முன்னிலையைப் பயன்படுத்த வேண்டும்.

*உதாரணம் !*

भवान् अत्र फलं आनयति । *நீர்/நீங்கள் இங்கு பழத்தைக் கொணர்கிறீர்.*

भवती विद्यालयं गच्छति । *நீர்/நீங்கள் (பெண்பால்) பள்ளிக்கூடத்தை (திற்கு) செல்கிறீர்.*

भवत्या सह अहं अपि आगच्छामि । *தங்களுடன் (பெ.பா.) நானும் வருகிறேன்.*

भवन्तं अहं अनुसरामि । தங்களை நான் பின்பற்றுகிறேன்.
भवतीं सः तत्र नयति । தங்களை (பெ.பா.) அவர் அங்கு அழைத்துச் செல்கிறார்.

भवता सह रामः क्रीडति । தங்களுடன் ராமன் விளையாடுகிறான்.

முதல் வேற்றுமையில் மட்டும் भवान् என்பது आनयति என்ற வினைச்சொல்லின் செயலைச் செய்பவனுனதால் இந்த மாறுதல். भवन्तं, भवत्या என்றவிடங்களில் அந்தச் சொற்கள் நேரிடையாக வினையைச் செய்யாததால் அங்கு வினைச் சொற்களில் மாறுதல் இல்லை. भवान् भवती இவற்றை எங்கும் முக்கியமாக மரியாதையில் குறைந்தவர்களைக் குறிப்பிடப் பயன்படுத்துவதில்லை. त्वं ஐ எங்கும் பயன்படுத்த முடியும்.

## सप्तत्रिंशः पाठः பாடம் 37

### மூன்றாம் விபக்தி - வாக்கிய அமைப்பு

एषः दक्षिणेन हस्तेन लिखति । இவன் வலது கையால் எழுதுகிறான்.

सा वामेन हस्तेन लिखति । அவள் இடது கையால் எழுதுகிறாள்.

त्वं केन हस्तेन लिखसि । நீ எந்தக் கையால் எழுதுகிறாய்.

अहं अनेन हस्तेन एव लिखामि । நான் இந்தக் கையாலேயே எழுதுகிறேன்.

अहं पादाभ्यां चलामि । நான் கால்களால் நடக்கிறேன்

त्वं दन्तैः इक्षुकाण्डं चर्वसि । நீ பற்களால் கரும்பை மெல்கிறாய்

त्वं केन खेलसि? நீ யாருடன் விளையாடுகிறாய்?

त्वं कृष्णेन कन्दुकेन क्रीड । நீ கிருஷ்ணனுடன் பந்தால் விளையாடு.

दुष्टः बालः शिलाखण्डेन मण्डूकं प्रहरति । துஷ்டனான சிறுவன் கல்துண்டால் தவளையை அடிக்கிறான்.

जननी बालं हस्ताभ्यां उपगूहते । *தாயார் சிறுவனை இரு கைகளால் அணைக்கிறாள்.*

श्यामः जलेन मुखं प्रक्षालयति । *சியாமன் தண்ணீரால் முகத்தை அலம்புகிறான்.*

त्वया सह अहं पत्तनं गच्छामि । *உன்னுடன் நான் பட்டணத்தை (திற்கு) செல்கிறேன்.*

गुरुः छात्रैः साकं अटति । *ஆசிரியர் மாணவர்களுடன் சுற்றிவருகிறார்.*

रामेण विना क्रीडाङ्गणं गच्छामि । *ராமனில்லாமல் விளையாட்டுத்திடலை (லுக்குச்) செல்கிறேன்.*

श्रमेण धनं सम्पादयति । *உழைப்பால் பொருளைச் சம்பாதிக்கிறான்.*

बुद्धिः विद्यया वर्धते । *அறிவு கல்வியால் வளர்கிறது.*

अलं वेगेन, मन्दं गच्छ । *வேகம் போதும், மெள்ளச்செல்.*

कृष्णेन तुल्यः नरः न अस्ति । *கிருஷ்ணனுடன் ஈடான மனிதன் இல்லை.*

कुचेलेन गोविन्दः मैत्रीं भजते । *குசேலனுடன் கோவிந்தன் நட்பைப் பேணுகிறான்.*

विश्वस्तेन भृत्येन कार्यं निर्वह । *நம்பப்பட்ட பணியாளனைக் கொண்டு செய்ய வேண்டியதை நிறைவேற்றிக்கொள்.*

दशरथः पुत्रैः पूर्णः अस्ति । *தசரதர் பிள்ளைகளால் நிறைந்தவராக இருக்கிறார்.*

कुचेलः धनेन रिक्तः भवति । *குசேலர் செல்வத்தால் ஏழையாக இருக்கிறார்.*

श्रमेण असाध्यं न अस्ति । *உழைப்பால் சாதிக்க முடியாதது இல்லை.*

अहं अनृतेन लज्जे । *நான் பொய்யால் வெட்கப்படுகிறேன்.*

धनेन , हीनः लज्जते । *செல்வத்தால் குறைந்தவன் வெட்கப்படுகிறான்.*

सः नियमेन पठति । அவன் கட்டுப்பாட்டுடன் படிக்கிறுன்.

राजा नियमेन राज्यं पालयति । அரசன் கட்டுப்பாட்டுடன் அரசை ஆள்கிறுன்.

रजकः फेनकेन वस्त्रं शोधयति । வண்ணுன் சோப்பால் துணியை சுத்தப்படுத்துகிறுன்.

माता गुडेन भक्ष्यं करोति । தாயார் வெல்லத்தால் பக்ஷணத்தைச் செய்கிறுள்.

प्रह्लादः भगवता रक्षितः । பிரஹ்லாதன் கடவுளால் காப்பாற்றப்பட்டவன்.

त्वं केन पश्यसि? நீ எதனுல் பார்க்கிறுய்?

अहं नेत्राभ्यां पश्यामि । நான் இரு கண்களால் பார்க்கிறேன்.

सः केन शृणोति? அவன் எதனால் கேட்கிறுன்?

सः कर्णाभ्यां शृणोति । அவன் இரு காதுகளால் கேட்கிறுன்.

अहं दन्तैः दशामि । நான் பற்களால் கடிக்கிறேன்.

सः शष्कुलीं दन्तैः चर्वति । அவன் முறுக்கைப் பற்களால் மென்று சாப்பிடுகிறுன்.

पेयां जिह्वया लिहसि । கூழை நாக்கால் நக்குகிறுய்.

अहं आस्येन नासिकया च श्वसिमि । நான் வாயாலும் மூக்காலும் மூச்சுவிடுகிறேன்.

सः हस्ताभ्यां पुस्तकं आददाति । அவன் கைகளால் புத்தகத்தை எடுக்கிறுன்.

रामः खगं हस्ताभ्यां स्पृशति । ராமன் பட்சியை இரு கைகளால் தொடுகிறுன்.

विष्णुः तुलसीं नासिकया जिघ्रति । விஷ்ணு துளசியை மூக்கால் முகருகிறுர்.

अहं पादाभ्यां चलामि । நான் இரு கால்களால் நகர்கிறேன்.

अहं वाचा वदामि । நான் வாயால் பேசுகிறேன்.

सः भुजाभ्यां आलिङ्गति । அவன் இரு கைகளால் அணைக்கிறான்
अंगुलीभिः रामनाम गणयति । விரல்களால் ராமனின் பெயரை எண்ணுகிறான்.
रसनया रसं अभिजानामि । நாக்கால் சுவையை உணர்கிறேன்.
नासिकया गन्धं अनुभवामि மூக்கால் மணத்தை அனுபவிக்கிறேன்.
माधवः उरसा लक्ष्मीं धरति । மாதவர் மார்பால் லக்ஷ்மியைத் தாங்குகிறார்.
आदिशेषः फणैः पृथिवीं धरति । ஆதிசேஷன் படங்களால் பூமியைத் தாங்குகிறார்.
चित्रकारः तूलिकया चित्रं लिखति । சித்திரம் எழுதுபவர் தூரிகையால் சித்திரத்தை எழுதுகிறார்.
भारवाहः शिरसा भारं वहति । மூட்டைசுமப்பவர் தலையால் சுமையைத் தாங்குகிறார்.
रजकः हस्ताभ्यां वस्त्रं क्षालयति । வண்ணான் இரு கைகளால் துணியைத் துவைக்கிறான்.
तक्षकः क्रकचेन वृक्षं भिनत्ति । தச்சன் ரம்பத்தால் மரத்தை துண்டாடுகிறான்.
चोरः पादाभ्यां द्रुतं धावति । திருடன் இருகால்களால் வேகமாக ஓடுகிறான்.
गायकः उच्चेन स्वरेण गायति । பாடகர் மேல்குரலால் பாடுகிறார்.
तन्तुवायः तन्तुभिः पटं वयति । சேணியன் நூல்களால் துணியை நெய்கிறான்.
कुब्जः दण्डेन चरति । குள்ளன் தடியுடன் நடக்கிறான்.
खञ्जः दण्डेन चलति । நொண்டி தடியால் நகர்கிறான்
अन्धः स्पर्शेन जानाति । குருடன் தொடுகையால் உணர்கிறான்.
मालाकारः पुष्पाणि सूत्रेण ग्रथ्नाति । மாலை செய்பவன் பூக்களை நூலால் தொடுக்கிறான்

कुम्भकारः मृत्तिकया घटं तनोति । குயவன் மண்ணால் பானையைச் செய்கிறான்.

लोहकारः अग्निना लोहं तापयति । கம்மாரன் நெருப்பால் இரும்பை காய்ச்சுகிறான்.

आपणिकः शकटेन वस्तूनि आनयति । கடைக்காரன் வண்டியால் பொருள்களைக் கொணர்கிறான்.

चर्मकारः चर्मणा उपानहौ रचयति । சக்கிலியன் தோலால் இரு செருப்புகளைச் செய்கிறான்.

गोपालः दण्डेन धेनूः शाद्वलां भूमिं नयति । இடையன் தடியால் பசுக்களை புல் நிறைந்த பூமிக்கு கொண்டு செல்கிறான்.

कर्मकरः श्रद्धया कर्म करोति । வேலைக்காரன் கருத்துடன் பணியைச் செய்கிறான்.

सेवकः नियमेन प्रातः इह आगच्छति । பணியாளன் வழக்கமாக காலையில் இங்கு வருகிறான்.

कार्यं उद्यमेन सिध्यति । பணி முயற்சியால் நிறைவேறுகிறது.

व्याधः वागुरया मृगं नियच्छति । வேடன் வலையால் மானை கட்டுகிறான்.

सारथिः अश्वं कशया ताडयति । சாரதி குதிரையை சவுக்கால் அடிக்கிறான்.

सीता वीणया गायति । ஸீதை வீணையால் பாடுகிறாள்.

स्वर्णकारः व्रश्चनेन स्वर्णं खण्डयति । தட்டான் மெல்லிய ரம்பத்தால் தங்கத்தைத் துண்டாடுகிறான்.

यतिः दण्डेन राजते । துறவி தண்டத்தால் விளங்குகிறார்

कितवः अक्षैः दीव्यति । சூதாடி பாய்ச்சுக்காய்களால் சூதாடுகிறான்.

कपिः जवेन उत्पतति । குரங்கு வேகத்துடன் எம்பிக் குதிக்கிறது.

इष्टकाभिः भवनं रचयति । செங்கற்களால் வீட்டைக் கட்டுகிறான்.

कुञ्चिकया कवाटं उद्घाटयति । *சாவியினுல் கதவைத் திறக்கிருன்.*

कुञ्चिकया तालिकां विबध्नाति । *சாவியினுல் பூட்டைப் பூட்டுகிருன்.*

कृपणः मृत्तिकया वित्तं निगूहति । *லோபி மண்ணுல் சம்பாதித்த செல்வத்தை மூடுகிருன்.*

खनित्रेण भूमिं खनति । *மண்வெட்டியால் பூமியை வெட்டுகிருன்.*

घरट्टेन तण्डुलं पिनष्टि । *எந்திரத்தால் அரிசியை அரைக்கிருன்.*

ओदनेन क्षुधां शमयति । *உணவால் பசியை அடக்குகிருன்.*

ऐश्वर्येण अवलेपं भजते । *செல்வத்தால் செறுக்கை அடைகிருன்.*

कुंकुमतिलकेन ललाटं शोभते । *குங்குமப் பொட்டால் நெற்றி அழகுறுகிறது.*

शिशुः हस्तेन अग्निं स्पृशति । *குழந்தை கையால் நெருப்பைத் தொடுகிறது.*

शिशुं अन्यतः नय । *குழந்தையை வேறு இடத்திற்குக் கொண்டுபோ.*

सः कशया अश्वं ताडयति । *அவன் சாட்டையால் குதிரையை அடிக்கிருன்.*

शकटं चक्राभ्यां चलति । *வண்டி இரு சக்கரங்களால் நகர்கிறது.*

दानेन वैरं नश्यति । *கொடையால் பகை அழிகிறது*

बुधः विद्यया लसति । *அறிவாளி கல்வியால் விளங்குகிறான்.*

धनेन विहीनं बन्धुः त्यजति । *பணத்தால் குறைவுற்றவனே உறவினன் கைவிடுகிருன்*

धनेन मानवः श्रमं निस्तरति । *பணத்தால் மனிதன் துன்பத்தைத் தாண்டுகிருன்.*

सह, साकं, सार्धं, समं *இவை 'கூட' என்ற பொருளில் வரும் அவ்யயச் சொற்கள். மூன்ரும் விபக்தியுடன் சேர்பவை.*

सीतया सह/साकं/सार्धं/समं रामः वनं गच्छति । ஸீதையுடன் ராமர் காட்டை அடைகிறார்.

मृगाः मृगैः सह यान्ति । மான்கள் மான்களுடன் கூடச்செல்கின்றன

मूर्खाः मूर्खैः सह व्रजन्ति । மூர்க்கர்கள் மூர்க்கர்களுடன் கூடச்செல்கிறார்கள்.

बुधः बुधेन सह सङ्गच्छते । அறிவாளி அறிவாளியுடன் கூடச்சேர்கிறான்.

दुर्जनः दुःखेन जीवति । கெட்டவன் துன்பத்துடன் வாழ்கிறான்.

सज्जनः सुखेन जीवति । நல்லவன் இன்பத்துடன் வாழ்கிறான்.

இதுவரை, மூன்றாம் விபக்தியில் பல வாக்கிய அமைப்புகளைக் கற்றோம். முதல் விபக்தியில் கூறப்படுபவன் கர்த்தா ஆகிறான். அவனது பணியை வினைச்சொல் விளக்குகிறது. அந்தப்பணியில் உதவுபவை - துணை செல்பவை அனைத்தும் மூன்றாம் விபக்தியால் குறிப்பிடப்படுகின்றன.

## भाषणे संस्कृतम्

अये स्वामिनाथ ! सुप्रभातम् । ஸ்வாமிநாதா ! நற்காலை.

आगच्छ, अन्तः आगच्छ । வா, உள்ளே வா.

उपविश, का वार्ता? உட்கார், என்ன சேதி?

स्वस्ति, आगच्छामि । நல்லது, வருகிறேன்.

सर्वत्र कुशलम् । எல்லாவிடத்திலும் க்ஷேமம்.

चिराय त्वां पश्यामि । வெகு நாட்களுக்குப் பின் உன்னைப் பார்க்கிறேன்.

कदा आगतः? रात्रौ वा? எப்போது வந்தாய்? இரவிலா?

ह्यः प्रातः एव । நேற்று காலையிலேயே.

कुत्र अवसः? எங்கு தங்கியிருந்தாய்?

मम सहोदरस्य गृहे । என் சகோதரன் வீட்டில்.

निस्थानोपगृहे वसामि । ஸ்டேஷன் ஓய்வறையில் தங்கியிருக்கிறேன்.

## अष्टत्रिंशः पाठः பாடம் 38
## நான்காம் விபக்தி வாக்கிய அமைப்பு

**सम्प्रदानविभक्तिः** *என நான்காம் விபக்திக்குப் பெயர், ஸம்பிரதானம் - வழங்குதல்.*

*1. யாருக்கு வழங்கிறோமோ அவரும், எந்தப் பயனை முன்னிட்டு வழங்குகிறோமோ அப்பயனும் நான்காம் விபக்தியில் குறிப்பிடப்பெறும். 2. ஒருபொருள் எந்தப்பயன் பொருட்டுப் பயன்படுத்தப்படுகிறதோ, அந்தப்பயனும் நான்காம் விபக்தியில் குறிப்பிடப்பெறும். 3. சில தனித்த வினைச் சொற்களை உபயோகிக்கும் போது அவ்வினைகளில் நேரிடையாகத் தொடர்பு கொள்பவன் நான்காம் வேற்றுமையில் குறிப்பிடப்பெறுகிறான். உதாரணம்* **धारयति, क्रुध्यति, द्रुह्यति** *முதலியன. இவற்றிற்கான சில உதாரணங்கள் பாடத்தில் தரப்பட்டுள்ளன. மேலும் சிலவற்றைக்கண்டு தெளிவுபெறுவோம்.*

खेलनाय कन्दुकं यच्छति । *விளையாடுவதற்குப் பந்தைத் தருகிறான்.*
खेलनाय कन्दुकेन अलम् । *விளையாடுவதற்குப் பந்து போதும்*
पानाय फलरसः अस्ति । *குடிப்பதற்குப் பழச்சாறு உள்ளது.*
वासाय, गृहं सज्जम् । *குடியிருப்பதற்கு வீடு தயாராக உள்ளது.*
आरोहणाय अश्वः सज्जः । *ஏறுவதற்குக் குதிரை தயாராக உள்ளது.*

बालकेभ्यः पुस्तकानि वितरति । *சிறுவர்களுக்குப் புத்தகங்களை வழங்குகிறான்.*

रामाय फलानि रोचन्ते । *ராமனுக்கு பழங்கள் பிடிக்கின்றன.*
लोकाय स्वस्ति भवतु । *உலகிற்கு நன்மை ஏற்படட்டும்.*
स्वस्ति प्रजाभ्यः भवतु । *நன்மை மக்களுக்கு ஏற்படட்டும்.*

याचना माननाशाय । யாசிப்பது மதிப்பை இழப்பதற்கே.
जनः कल्याणाय यतते । மனிதன் க்ஷேமத்திற்காக முயலுகிறான்.
तण्डुलाय धनं यच्छति । அரிசிக்காகப் பணம் தருகிறான்.
तिलेभ्यः माषान् प्रयच्छति । எள்ளுக்காக உளுந்தைத் தருகிறான்.
फलाय उद्यानं व्रजति । பழத்திற்காகத் தோட்டத்திற்குச் செல்கிறான்.
माता पुत्राय न क्रुध्यति । தாய் பிள்ளையின்பொருட்டு (யிடம்) கோபிப்பதில்லை.
नृपः प्रजायै न द्रुह्यति । அரசன் மக்களின்பொருட்டு துரோகம் செய்வதில்லை.
मात्रे पित्रे च नमः । தாய்க்கும் தந்தைக்கும் உணக்கம்.
अहं जयाय यत्नं करोमि । நான் வெற்றிக்காக முயற்சியைச் செய்கிறேன்.
दानाय फलं क्रीणाति । வழங்குவதற்காகப் பழத்தை விலைக்கு வாங்குகிறான்.

## एकोनचत्वारिंशः पाठः- பாடம் 39

### ஐந்தாம் விபக்தி - வாக்கிய அமைப்பு

ஐந்தாம் விபக்தியில் குறிப்பிடப்படுபவை.

1. ஒன்று மற்றொன்றிலிருந்து, பிரியும்போது நிலைத்துள்ளது.
2. ஒரு பொருள் உண்டாகக் காரணமாயிருப்பது.
3. எங்கிருந்து தோன்றுகிறதோ அது.
4. எதைக்கண்டு பயம் ஏற்படுகிறதோ அது.
5. எதிலிருந்து ஒன்றைக் காப்பாற்றுகிறோமோ அது.
6. எதில் அருவருப்பு தோன்றுகிறதோ அது
7. எதிலிருந்து ஓய்வு பெறுகிறோமோ அது
8. எதிலிருந்து நழுவுகிறோமோ, தவறி விழுகிறோமோ அது

9. எதிலிருந்து மற்றொன்றை வேறுபடுத்திக் காட்டுகிறோமோ அது.

10. எதிலிருந்து ஒன்றைப் பெறமுடிகிறதோ அது.

वानरः वृक्षात् अवतरति । குரங்கு மரத்திலிருந்து இறங்குகிறது.

बालुः ग्रामात् आगच्छति । பாலு கிராமத்திலிந்து வருகிறான்.

कामात् क्रोधः जायते । ஆசையிலிருந்து கோபம் உண்டாகிறது.

अजीर्णात् ज्वरः जायते । (உணவு) செரியாமையால் ஜ்வரம் உண்டாகிறது.

भूमेः लता जायते । பூமியிலிருந்து கொடி உண்டாகிறது.

रेडियोयन्त्रतः गानं प्रभवति । ரேடியோ யந்திரத்திலிருந்து பாட்டு வெளியாகிறது.

रावणः रामात् बिभेति । ராவணன் ராமனிடமிருந்து பயப்படுகிறான்.

दुष्टः माणवः गुरोः बिभेति । கெட்ட மாணவன் ஆசிரியரிடமிருந்து பயப்படுகிறான்.

अहं वृष्टेः पुस्तकं रक्षामि । நான் மழையிலிருந்து புத்தகத்தைக் காப்பற்றுகிறேன்.

वृश्चिकात् शिशुं रक्षति । தேளிடமிருந்து சிசுவைக் காப்பாற்றுகிறான்.

नरः अश्वात् पतति । மனிதன் குதிரையிலிருந்து விழுகிறான்

माणवः पीठात् उत्तिष्ठति । மாணவன் இருக்கையிலிருந்து எழுகிறான்

चन्द्रः सूर्यात् प्रकाशं लभते । சந்திரன் ஸூர்யனிடமிருந்து ஒளியைப் பெறுகிறான்.

किङ्करः कूपात् जलं आनयति । வேலைக்காரன் கிணற்றிலிருந்து நீரைக் கொணர்கிறான்.

शृगालात् भयं भवति । நரியிடமிருந்து பயம் உண்டாகிறது.

नृपः प्रासादात् पश्यति । அரசன் உப்பரிகையிலிருந்து பார்க்கிறான்.

व्यायामात् बलं भवति । தேகப்பயிற்சியிலிருந்து வலிவு உண்டாகிறது

सहपठनात् विद्या स्थिरा भवति । சேர்ந்து படிப்பதால் கல்வி நிலைத்ததாக ஆகிறது.

अतिपरिचयात् अवज्ञा भवति । அதிகப் பழக்கத்தால் அவமதிப்பு ஏற்படுகிறது.

दुग्धात् दधि जायते । பாலிலிருந்து தயிர் உண்டாகிறது.

पर्जन्यात् अन्नं भवति । மழையால் உணவு உண்டாகிறது

दानात् सम्मानं लभते । கொடையால் நன்மதிப்பைப் பெறுகிறான்

शिशुः लालनात् प्रीतः भवति । குழந்தை அரவணைப்பால் மகிழ்ந்தவன் ஆகிறான்.

अतिलालनात् बालः दुष्टः भवति அதிக அரவணைப்பால் சிறுவன் துஷ்டனாகிறான்.

विनयात् बालः साधुः भवति । நேர்வழிப்படுத்துவதால் சிறுவன் சிறந்தவனாக ஆகிறான்

सन्तोषात् परमं सुखं न अस्ति । மகிழ்ச்சியைக் காட்டிலும் சிறந்த சுகம் இல்லை,

अनृतात् परमं पातकं न अस्ति । பொய்யைக் காட்டிலும் மேலான பாபச் செயல் இல்லை

तृष्णायाः परः व्याधिः न अस्ति । பேராசையைக் காட்டிலும் மேலான நோய் இல்லை

धनात् परमं प्रियं न अस्ति । செல்வத்தைக் காட்டிலும் மேலான அன்புக்குரியது இல்லை

कुंकुमकेसरं काश्मीरात् उत्पद्यते । குங்குமப்பூ காச்மீரத்திலிருந்து தோன்றுகிறது.

कस्तूरी हरिणात् उत्पद्यते । கஸ்தூரி மானிடமிருந்து உண்டாகிறது.

अहं गुरोः व्याकरणं पठामि । நான் குருவிடமிருந்து இலக்கணத்தைப் படிக்கிறேன்.

वित्तागारात् धनं आददामि । *வங்கியிலிருந்து பணத்தை எடுக்கிறேன்.*

नीचात् नरात् अपसरति । *நீச மனிதனிடமிருந்து விலகுகிறான்.*

## चत्वारिंशः पाठः- பாடம் 40

### ஆறும் விபக்தி - வாக்கிய அமைப்பு.

*மற்ற ஆறு விபக்திகளும் வினைச்சொல்லுடன் நேரிடைத் தொடர்பு கொண்டவை. ஆறுவது விபக்தி உடையவன் - உடைமை என்ற தொடர்பைக் குறிப்பிடும். க்கு-உடைய என்று குறிப்பிட இது உதவும். ராமனுக்கு. ராமனுடைய.* नेत्रयोः मध्ये *கண்களுக்கு இடையே* रामस्य गृहं *ராமனுடைய வீடு. மேலும் தொடர்பு இல்லாத பல பொருள்களிலும் ஷஷ்டி விபக்தி வரும். இதனைப் பல உதாரணங்கள் மூலம் விளக்குவோம்.*

देवदत्तस्य वाताटः । *இது தேவதத்தனின் பட்டம்.*

रामस्य पुत्रं कुशं जानामि । *ராமனின் பிள்ளையான குசனை அறிகிறேன்.*

रामस्य कथा रुचिरा । *ராமனின் கதை கவையுள்ளது.*

गङ्गायाः जलं पावनम् । *கங்கையின் நீர் தூயது.*

अजः तृणस्य हेतोः चरति । *ஆடு புல்லின் காரணமாக மேய்கிறது*

रामुः खाद्यस्य हेतोः अन्नापणं गच्छति । *ராமு உணவின் பொருட்டு உணவுக் கடைக்குச் செல்கிறான்.*

कस्य हेतोः रामः वनं जगाम?

*எதன் காரணமாக ராமன் காட்டிற்குச் சென்றான்?*

धर्मस्य हेतोः रामः वनं जगाम । *அறத்தின் காரணமாக ராமன் காட்டிற்குச் சென்றான்*

राघवस्य दक्षिणतः बिन्दुः तिष्ठति । *ராமனது தென்புறத்தில் பிந்து நிற்கிறான்*

उच्चविद्यालयस्य उत्तरतः क्रीडाङ्गणम् । *உயர் நிலைப்பள்ளியின் வடக்கில் விளையாட்டுத்திடல்.*

प्रेषालयस्य पुरतः अट्टशूलं विद्यते । *தபால்நிலயத்தின் முன்னர் ஹோட்டல் இருக்கிறது*

निम्बस्य फलं तिक्तम् । *வேம்பின் காய் கசப்பானது*

स्थलकमलस्य गन्धः हृद्यः । *ரோஜாப்பூவின் மணம் மனதிற்கு உவப்பானது*

जनन्याः स्मरति । *தாயை நினைக்கிறான் (உணர்ச்சிமிகத் தாயைப்பற்றிய நினைவைக் கொண்டிருக்கிறான்).*

छात्राणां श्रेष्ठः पुरस्कारं लभते । *மாணவர்களுக்குள் உயர்ந்தவன் பாராட்டைப் பெறுகிறான்.*

एषः गुरुः अध्यापनस्य हेतोः जीवति । *இந்த ஆசிரியர் போதிப்பதற்காகவே வாழ்கிறார்.*

त्वं कस्य हेतोः एवं शोचसि? *நீ எதற்காக இப்படி வருந்துகிறாய்*

गुरोः समक्षं अहं न उपविशामि । *ஆசிரியரின் எதிரில் நான் உட்காருவதில்லை*

देशस्य कृते भारती सर्वं अत्यजत् । *தேசத்திற்காக பாரதி எல்லாவற்றையும் துறந்தார்*

शिशोः रोदनं बलीयः । *குழந்தையின் அழுகை அதிக வலிமையுள்ளது.*

तव पुरस्तात् विद्यमानं ग्रन्थं पश्य । *உன் முன்னர் இருக்கின்ற புத்தகத்தைப் பார்.*

बसयानस्य पुरः मा गच्छ । *பஸ்ஸின் முன் செல்லாதே.*

रक्षाभटः रथ्यायाः मध्ये तिष्ठति । *காவல்காரர் வழியின் நடுவே நிற்கிறார்*

सः मार्गेण गच्छतां यानानां गतिं नियमयति । *அவர் வழியோடு செல்கின்ற வண்டிகளின் போக்கைக் கட்டுப்படுத்துகிறார்.*

तस्य उपरि छत्रं विद्यते । *அவருக்குமேல் குடை உள்ளது.*

यानस्य उपरिष्टात् वस्तूनि निदधाति । *வண்டியின்மேல் பொருள்களை வைக்கிறான்*

मम गृहस्य अधः रक्षागारः विद्यते । *என் வீட்டின் கீழே பாதுகாப்பறை உள்ளது.*

वृक्षस्य अधस्तात् वयं उपविशामः । *மரத்தின் அடியில் நாம் உட்காருகிறோம்.*

तव शयनं सज्जं वा? *உனது படுக்கை தயாராக உள்ளதா?*

आचार्यस्य कक्ष्यायाः बहिः गमनं अनु माणवकाः निर्गच्छन्ति । *ஆசிரியரின் வகுப்பிலிருந்து வெளிச் செல்லுதலைத் தொடர்ந்து மாணவர்கள் வெளியேறுகிறார்கள்.*

तव पुस्तकं गृहस्य अन्तः सुरक्षितं विद्यते । *உனது புத்தகம் வீட்டின் உள் நன்கு பாதுகாக்கப் பட்டதாக உள்ளது.*

भोजनस्य कृते दुष्टः किमपि कुर्यात् । *உணவின் பொருட்டு துஷ்டன் எதையும் செய்வான்.*

ग्रामस्य समीपं गन्तुं मार्गः नास्ति । *கிராமத்திற்கு அருகில் செல்ல வழியில்லை.*

सीतायाः पार्श्वं रामः आगच्छति । *சீதையின் பக்கத்தில் ராமன் வருகிறான்*

अस्माकं कक्ष्यायां कृष्णस्य तुल्यः क्रीडावीरः कोऽपि नास्ति । *எங்கள் வகுப்பில் கிருஷ்ணனுக்கு ஒப்பான விளையாட்டு வீரன் ஒருவரும் இல்லை.*

पुत्रस्य भद्रं पिता आकांक्षते । *பிள்ளையின் நன்மையைத் தகப்பன் விரும்புகிறான்.*

घृतं चक्षुषः आरोग्याय हितं भवति । *நெய் கண்ணின் நோயின்மைக்கு இதமாக உள்ளது.*

तव मङ्गलं भूयात् । உனக்கு நன்மை ஏற்படட்டும்.

पादधावनं पादचारस्य पथ्यम् । காலலம்புதல் கால்களால் சுற்றிவருவதற்கு நல்லது

अनेन तव किं प्रयोजनम् । இதனுல் உனக்கு என்ன பயன்?

जटायोः समक्षं एव रावणः सीतां जहार । ஜடாயுவின் கண் எதிரிலேயே சீதையை ராவணன் அபஹரித்தான்.

अपि तव कुशलम्?

உனக்கு க்ஷேமமா? (நீ க்ஷேமமாக இருக்கிருயா?)

तव दीर्घायुष्यं भूयात् । உனக்கு நீண்ட ஆயுள் இருக்கட்டும்.

अपि तव निरामयम्? உனக்கு நோயற்றநிலே இருக்கிறதா? (நோயற்று இருக்கிருயா?)

ईशः भक्तस्य दयते । ஈசன் பக்தனுக்கு தயை காட்டுகிருர்

सः परीक्षायाः उत्तरणस्य ईष्टे । அவன் பரீக்ஷையின் தேர்விற்கு வல்லவனுகிருன்

क्रेता शतस्य व्यवहरति । வாங்குபவன் நூறு (ரூபாய்)க்காக வாதாடுகிருன்

द्यूते शतस्य दीव्यति । சூதாட்டத்தில் நூறு (ரூபாய் வைத்து) ஆடுகிருன்

मातुः पाकः रुचिरः । அன்னேயின் (அன்னேயால் செய்யப்பட்ட) சமையல் ருசியானது.

हरिः मम सेव्यः । நாராயணன் எனது வழிபாட்டிற்குரியவர்

## एकचत्वारिंशः पाठः பாடம் 41

### ஏழாம் வேற்றுமை வாக்கிய அமைப்பு

வீட்டில் गृहे, கிராமத்தில் ग्रामे, காட்டில் अरण्ये, என்று வசிப்பதற்கு ஆதாரமான இடங்கள், பாத்திரத்தில் पात्रे முதலிய பொருள் வைப்பதற்கு ஆதாரமான இடங்கள், கணிதத்தில்

गणिते படம் வரைவதில் चित्रलेखने போன்ற தனிப்பட்ட விஷயங்கள், இவை ஸப்தமீயில் குறிப்பிடப்படுகின்றன.

வீட்டில் குடியிருப்பு என்றால் ஏதோ ஒரு மூலையில் இருப்போம். இதற்க மாறாக முழுவதும் பரவியுள்ள இடத்தையும் ஸப்தமியில் குறிப்பிடலாம். तिले तैलं (எள்ளில் எள்முழுவதிலும்) எண்ணெய். समुद्रजले लवणं கடல் நீரில் உப்பு போன்றவை. தூரத்தில் அல்லது அருகில் இந்தநேரத்தில் என்று குறிப்பிடவும் ஸப்தமிவருகின்றது.

अम्बुजं सरसि विकसति । தாமரை ஓடையில் மலர்கிறது
वानरः द्रुमेषु चरति । குரங்கு மரங்களில் நடமாடுகிறது
वराहः कर्दमे शेते । பன்றி சேற்றில் படுத்திருக்கிறது
कुलीरः पंके सरति । நண்டு சேற்றில் ஊர்கிறது
कूश्माण्डः लतायां लम्बते । பூசணிக்காய் கொடியில் தொங்குகிறது
समुद्रे तरणिः दृश्यते । கடலில் கப்பல் காணப்படுகிறது
तटाके पानीयं स्वादु । குளத்தில் நீர் இனியது
नद्यां प्रवाहः अतिवेगः । ஆற்றில் வெள்ளம் மிகவும் வேகமுள்ளது
पल्वले सलिलं आविलम् । குட்டையில் நீர் கலங்கியுள்ளது
कूपे मण्डूकः प्लवते । கிணற்றில் தவளை தாவுகிறது.
प्रयागे गङ्गा यमुनया सङ्गच्छते । பிரயாகையில் கங்கை யமுனையுடன் சேர்கிறது.
केदारे बीजं वपति । வயலில் விதையை விதைக்கிறான்
कोटरे खगाः निलीयन्ते । பொந்தில் பட்சிகள் மறைகின்றன
आकाशे गृध्रः डयते । வானில் கழுகு பறக்கிறது
हस्ते पञ्च अंगुलयः सन्ति । கைகளில் ஐந்து விரல்கள் உள்ளன
गोण्यां व्रीहिं पूरयति । சாக்கில் நெல்லை நிரப்புகிறான்

सा घरट्टे तण्डुलं पेषयति । அவள் ஏந்திரத்தில் அரிசியை அறைக்கிறாள்
गुर्जरेषु द्वारका विद्यते । குர்ஜர தேசத்தில் துவாரகா உள்ளது
मयूरः वर्षासु नृत्यति । மயில் மழைக்காலங்களில் ஆடுகிறது
तन्द्रालुः सन्ध्यायामपि शेते । சோம்பேறி சந்திநேரத்திலும் தூங்குகிறான்.
रात्रौ चोराः चरन्ति । இரவில் திருடர்கள் நடமாடுகிறார்கள்.
प्रभाते मङ्गलं वद । விடியற்காலையில் மங்களமானதைப் பேசு.
भेकाः रात्रौ रटन्ति । தவளைகள் இரவில் கத்துகின்றன.

नरेषु रामः श्रेष्ठः । மனிதர்களில் ராமன் உயர்ந்தவன்
षट्सु चत्वारि फलानि त्वं स्वीकुरु । ஆறில் நான்கு பழங்களை நீ ஏற்றுக்கொள்.
गच्छत्सु धावन् शीघ्रं याति । செல்பவர்களில் ஓடுபவன் வேகமாகச் செல்கிறான்.
छात्रेषु रामुः पटुः । மாணவர்களில் ராமு சுறுசுறுப்பானவன்
लोहेषु कनकं अत्यर्घम् । உலோகங்களில் தங்கம் விலை உயர்ந்தது.

चर्मणि हरिणः हतः । தோலுக்காக மான் கொல்லப்பட்டது.
दन्तयोः गजः हतः । இரு தந்தங்களுக்காக யானை கொல்லப்பட்டது.

सीतायां धनुः भग्नम् । சீதைக்காக வில் ஒடிக்கப்பட்டது.
धेनुषु दुह्यमानासु (सतीषु) गतः । மாடுகள் கறக்கப்படும்போது சென்றான்
रामे मृगयायै गते (सति) रावणः सीतां अपाहरत् । ராமன் வேட்டைக்குச் சென்றபோது ராவணன் சீதையை அபகரித்தான்.
सूर्ये अस्तं गते (सति) गावः गोष्ठं आगच्छन्ति । ஸூரியன் அஸ்தமித்ததும் மாடுகள் கொட்டிலை அடைகின்றன.

विरामकाले समाप्ते (सति) छात्राः विद्याशालां अगच्छन् । விடுமுறை முடிந்ததும் மாணவர்கள் பள்ளிக்கூடத்தை அடைந்தனர்.

अध्यापके कक्षं प्रविष्टे (सति) माणवाः उदतिष्ठन् । ஆசிரியர் வகுப்பறையில் நுழைந்ததும் மாணவர்கள் எழுந்து நின்றனர்.

जनन्यां आपणं गतायां (सत्यां) भगिनी गृहकर्म करोति । தாய் கடைக்குச் சென்றபோது சகோதரி வீட்டுவேலையைச் செய்கிறாள்.

शुभवेलायां आसन्नायां (सत्यां) अहं प्रतिष्ठे । நல்லவேளை நெருங்கியதும் நான் கிளம்புகிறேன்.

चन्द्रे उदिते (सति) कुमुदं विकसति । சந்திரன் உதித்ததும் அல்லி மலர்கிறது.

पुष्पे स्फुटति (सति) भृङ्गः आगच्छति । மலர் மொட்டவிழும்போது தேனீ வருகின்றது.

रामः जनन्यां साधुः, ताटकायां असाधुः । ராமன் தாய் விஷயத்தில் நல்லவன், தாடகைவிஷயத்தில் பொல்லாதவன்.

उपकरिषु सर्वेऽपि साधवः । உபகரிப்பவர்களிடம் அனைவரும் ஸாதுக்கள்.

अपकारिषु यः साधुः सः एव साधुः । கெடுதி விளைவிப்பவர்களிடம் எவன் நல்லவனோ அவனே நல்லவன்.

अहं पचने आसक्ता । நான் சமையலில் ஈடுபாடுள்ளவள்.

सः कन्दुकक्रीडायां कुशलः । அவன் பந்து விளையாட்டில் தேர்ந்தவன்

माता सीवने निपुणा । தாயார் தையலில் கெட்டிக்காரி

उषा धावने चतुरा । உஷா ஓடுவதில் கெட்டிக்காரி.

अहं छात्रावासे वसामि । நான் மாணவர்விடுதியில் வசிக்கிறேன்.

सः तरणकुण्डे तरणं अभ्यस्यति । அவன் நீச்சல் தொட்டியில் நீச்சலைக் கற்றுக் கொள்கிறான்.

इयं बालिका मल्लयुद्धे निपुणा । *இந்தச்சிறுமி மற்போரில் கெட்டிக்காரி,*

आचार्यः फलके लिखति । *ஆசிரியர் பலகையில் எழுதுகிறார்*

अहं मदीये संग्रहपुस्तके प्रतिलिखामि । *நான் எனது குறிப்புப்புத்தகத்தில் நகல் எழுதுகிறேன்.*

लेखिन्यां मषी विद्यते । *பேனாவில் மை உள்ளது.*

कन्दुकाग्रायां लेखिन्यां मषी अवसिता । *பந்துமுனைப் பேனாவில் மை தீர்ந்துவிட்டது.*

संस्कृतं भाषासु मधुरतमं लघुतमं च । *ஸம்ஸ்கிருதம் மொழிகளில் மிகவும் இனிமையானது. மிகவும் எளிதானதும் கூட.*

नर्मदा नदीषु दीर्घतमा । *நர்மதை ஆறுகளில் மிகவும் நீண்டது.*

शृगालः वन्येषु मृगेषु धूर्ततमः । *நரி காட்டுவிலங்குகளில் மிகவும் போக்கிரி.*

मनोहरः मयि भ्रातृवत् स्निह्यति । *மனோகரன் என்னிடம் ஸகோதரன்போல் அன்பு கொள்கிறான்.*

गोपालः गाः कीलकेषु बध्नाति । *இடையன் பசுக்களை முளைகளில் கட்டுகிறான்.*

सः व्यवहारे कितवः । *அவன் பழக்கத்தில் வஞ்சகன்*

## மாதிரிக் கேள்விகள்

*முதல் பாகத்திலுள்ள பாடங்களில் சில மாதிரிக் கேள்விகளைத் தருகிறோம். விடை எழுதிப் பாருங்கள்.*

1 *ஸம்ஸ்கிருத எழுத்துக்களில் எத்தனைப் பிரிவுகள்?*

2 *எழுத்துவரிசை எதில் ஆரம்பித்து எதில் முடிகிறது?*

3 *உயிர் எழுத்துக்களில் எத்தனை பிரிவுகள் உள்ளன?*

4 *மெய்யெழுத்துக்களில் எத்தனை பிரிவுகள் உள்ளன?*

5 *கூட்டெழுத்துக்கள் எந்த எந்த வகையில் அமைக்கப் படுகின்றன?*

6 கீழ்கண்ட சொற்கள் எந்த வரிவடிவத்தைக் குறிப்பிடு கின்றன? अनुस्वारः, विसर्गः, रेफः

7 லிங்கங்கள் எவ்வளவு? வகைக்கு 3 உதாரணங்களைத்தருக.

8 லிங்க அமைப்பு சொல்லைச் சார்ந்ததா? பொருளைச் சார்ந்ததா?

9 மற்ற மொழிகளில் இல்லாமல் ஸம்ஸ்கிருத்தில் மட்டும் உள்ள வசன அமைப்பு எது?

10 ஸம்ஸ்கிருத வினைச் சொற்களில் 3 புருஷன்கள் உள்ளன. அவற்றைக் குறிப்பிடும் ஸர்வநாம சப்தங்கள் எவை?

11 கேள்விகளுக்குப் பயன்படும் ஸர்வநாம சப்தங்கள் எவை?

12 ஏழு வேற்றுமைகளின் பொதுப்பெயர், தனிப்பெயர் எவை? அவை எந்தப்பொருளில் வருகின்றன?

13 புல்லிங்க சப்தங்களிலும், நபும்ஸகலிங்கச் சொற்களிலும் எந்த விபக்திவசனங்களில் ஒற்றுமை காணப்படுகின்றது? எந்த விபக்தி வசனங்களில் வேற்றுமை காணப் படுகின்றது?

14 औ, भ्यां भ्यः, ओः என்ற நான்கு விபக்தி விகுதிகளும் எந்த விபக்திவசனங்களில் வருகின்றன?

15 கீழேகண்ட உதாரணங்களில் உள்ள औ, भ्यां, भ्यः, ओः என்று முடியும் சொற்கள் எந்த எந்த விபக்தி வசனங்களில் அமைந்துள்ளன? அவற்றை எப்படி அடையாளம் கண்டீர்கள்?

पर्वतयोः मध्ये नदी प्रवहति ।
नेत्राभ्यां अश्रूणि पतन्ति । सारथिः अश्वाभ्यां घासं यच्छति ।
दीनेभ्यः भोजनं देहि । बालौ आलयं गच्छतः । भोजनात् पूर्वं
हस्तौ क्षालय । करयोः दश अंगुलयः सन्ति । बालः पादाभ्यां

चरति । मधुकराः पुष्पेभ्यः मधु पिबन्ति ।

16 பின்வரும் சொற்கள் எந்த எந்த லிங்கத்தைச் சேர்ந்தவை? लता, याचक, पल, भवन, आलय, आयुध भूमि, मूषक, कामधेनु द्वार, गिरि, तरु இவற்றின் பிரதமா விபக்தி - ஏகவசனம், திருதீயாவிபக்திபஹுவசனம், ஸப்தமீவிபக்தி த்விவசனம் இவற்றை எழுதுக.

17. நகக்குறியில் அடங்கிய சொற்களுக்குத்தக்க விபக்தி அமைக்கவும்.

बालः (सङ्गीत) निपुणः।
माता (शिशु) लालयति। अहं (पाणि) लिखामि। हरिणः (पाद) धावति। बालः (पाद) चलति। रमा (विद्यालय) आगच्छति। ललिता (जल) आनयति। सः (कर्ण) शृणोति। कपिः (हस्त) फलानि हरति। (पथिक) आभरणानि अपहरति। दुर्जनः (दुःख) जीवति। शकटं (चक्र) चलति। रामः (सीता) सह वनं गच्छति। अहं (राम) विना तत्र न गच्छामि। परपीडनं (पाप) भवति। वासाय (गृह) सज्जं कुरु। माता बालं (हस्त) आलिङ्गति। (राम) विना क्रीडाङ्गणं गच्छ। अयं (वाम) (हस्त) आददाति। अहं (दक्षिण) (हस्त) लिखामि। बुद्धिः (विद्या) विलसति। (कृष्ण) समानः, वीरः न भवति। (श्रम) सर्वं साध्यं अस्ति। पद्मं (तटाग) विकसति। वानरः (वृक्ष) वृक्षं प्लवति। (नदी) प्रवाहः अधुना मन्दः भवति। (गङ्गा) तीरे वाराणसी भवति। रामः (परीक्षा) उत्तरणं इच्छति। (जटायु) समक्षं रावणः सीतां अपाहरत्। (त्वद्) मङ्गलं भवतु। (वृक्ष) छायायां धेनुः तिष्ठति। (विनय) विद्या वर्धते। (सीता) पार्श्वे रामः तिष्ठति। (वृष्टि) जलं लभते। (आचार्य) व्याकरणं पठ। कस्तूरी (हरिण) जायते। (लालन) बालः सन्तोषं लभते। (सिंह) भयं भवति। माणवकः (आसन) उत्तिष्ठति।

18 கீழ் தந்துள்ள சொற்களைக்கொண்டு வாக்கியங்களை அமைக்கவும்.

पश्यावः, पठतः, गच्छसि, लभते, व्यायामः, दुःखं
सङ्गच्छते, जीवति, नश्यति, यच्छामः, वितरति,
फलानि, प्रजाः, उद्यानं, क्रीणामि, अतः, प्रभवति

19 கீழ்வரும் சொற்கள் எந்த வேற்றுமையுள்ள சொற்களுடன் இணைகின்றன?

कुप्यति, त्रस्यति, समर्थः, अलं, विना, ऋते,
उद्भवति, याचते, सह, बिभेति, साधुः, नमः

20 கீழ்க்கண்ட சொற்களுக்கு குறிப்பிட்ட விபக்தியில் ரூபங்கள் எழுதவும்.

| | | |
|---|---|---|
| हरि -, 6 வது | सीता - 4 வது | फलं - 7 வது |
| गुरु- 4 வது | बुद्धिः - 4 வது | कन्दुकं - 3 வது |
| प्रजा - 5 வது | याचना -7 வது | अवज्ञा - 2 வது |
| साधुः 2 வது | हेतुः 6 வது | गतिः - 2 வது |
| रात्रिः -7 வது | नदी -7 வது | त्वं - 3-வது |
| एतत् (पु) 3 வது | इदं (नपुं) 5 வது | वाराणसी - 7 வது |
| परीक्षा 4 வது | जननी -5 வது | भोजनं - 6 வது |

21 கீழ்வரும் வினைச்சொற்களின் நிகழ்காலத்தில் மத்யம புருஷனிலும் உத்தமபுருஷனிலும் ரூபங்களை எழுதுக.

धावति, चलति, क्रीडति, कुप्यति, लिखति
आनयति, गायति, भवति, जयति, क्षालयति

22 கீழ்க்கண்ட சொற்களுக்குத் தமிழில் பொருள் தருக.

कुसुमं, सुता, जननी, मयूरः, कृमिः, वधूः, घण्टा, ध्वनिः,
बाल्यं, माहात्म्यं, पुस्तः, उच्चैः, परशुः, सम्यक्, कूपः, पुष्पवाटी,

सहपाठकः, भृतकः, स्नुषा, मोदकः, पादपः, क्षीराब्धिः, स्पर्धा, क्रीडनकं, चित्रलेखनं, अंगुल्यः, तस्मिन्, त्वयि, मह्यं, युवयोः, अस्मासु, एषां, अस्य

23 கீழ்க்கண்ட சொற்களுக்கு ஸம்ஸ்கிருதச்சொற்கள் தருக.

மலை, ஆறு, தோட்டம், உறவினர், புலவர், மனைவி, தண்ணீர், மரம், கொடி, கோயில், ஒவ்வொரு நாளும், ஆனால், இங்குமங்கும், மூங்கில், அதனால், எப்போதும், எப்போதாவது, தெரு, புகழ், பரிசு, தந்தை, எண்ணெய்.

24 ஸம்ஸ்கிருத்தில் மொழிபெயர்க்கவும்.

தாய் குழந்தைக்குப் பால் கொடுக்கிறாள். கல்வி வினயத்தைத் தருகிறது. ராமன் மலை ஏறுகிறான். நீ வீட்டிற்குப் போ. கணவன் மனைவியுடன் கடைக்குச் செல்கிறான். போரில் வெற்றி பெறுகிறான். நான் என்ன செய்கிறேன்? யானைக்குச் சிங்கம் எதிரி. எலிக்குப் பூனை எதிரி. ராமனுக்கு சுக்ரீவன் நண்பன். இமயமலையிடமிருந்து ஆறுகள் தோன்றுகின்றன. கண்களிலிருந்து கண்ணீர் நிறைய வடிகிறது. அரசன் எளியவர்களுக்கு ஆடைகளை வழங்குகிறான். தாய் என்னிடம் கோபிக்கிறாள். யார் குதிரையைக் கையால் அடிக்கிறான்? மனிதன் உணவிற்காக அங்கும் இங்கும் அலைகிறான். அவளது கோபத்தின் காரணமென்ன? யார் மலைமீது ஏறுகிறான்?

25 தமிழில் மொழிபெயர்க்கவும்.

कः तत्र गच्छति? तं आनय । हिमवतः शिखराणि रम्याणि । प्रातः सूर्यं नमामः । आर्य ! स्वागतं भवते । उपविशतु भवान् । माला चित्रं मय्या लिखति । अहं श्रीरङ्गं गन्तुं इच्छामि । गोपालः उद्याने कन्दुकेन क्रीडति । वेङ्कटेश ! त्वं किं श्रीरङ्गे वससि? बाला दुकूलाय स्पृहयति । माता तस्यै नूतनानि आभरणानि यच्छति । आवां छायाचित्रस्य दर्शनाय नगरीं गच्छावः ।

கடந்த பல ஆண்டுகளில் இதன் மூலம் பயிற்சி பெற்றவர்கள் தாமே ஆங்காங்கு ஆரம்ப வகுப்புகளை தொடங்கி எமது சேவையில் பங்கு கொண்டுள்ளனர். அவர்களது ஈடுபாடு பெரிதும் போற்றத்தக்கது.

## ஸம்ஸ்கிருதஸ்ரீ பாடமாலா

ஸம்ஸ்கிருதஸ்ரீ பத்திரிகையில் வெளியான பாடங்களை மட்டும் தனியே தொகுத்து ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா என்ற 7 பாகங்கள் கொண்ட தொகுப்பு வெளியாகியுள்ளது. இவை அவ்வப்போது பெறும் அனுபவங்கள் மூலம் மறு பரிசீலனைக்கு உட்படுத்தப் பட்டுள்ளன. இவற்றின் துணைகொண்டு ஸம்ஸ்க்ருதத்தை எழுத்துப் பயிற்சியில் தொடங்கி காவியங்கள் வரை எளிதில் கற்கலாம். ஆங்கிலத்திலும் பாடமாலா 1—2 பாகங்கள் வெளியாகியுள்ளன.

ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா என்ற தொகுப்பை பெறுபவர்கள் அவற்றில் வெளியாகியுள்ள பாடங்களைப் பயின்று பாடங்களின் இறுதியில் கொடுக்கப் பெற்றுள்ள பயிற்சிகளைத் தாமே எழுதி புக் போஸ்டு மூலம் Book-post Posted under clause 114 (8) of P & T Guide : PUPILS EXERCISE என்று உறைமீது குறிப்பிட்டு (உறையின் வாயை ஒட்டாமல்) எமக்கு அனுப்பினால் திருத்தி அனுப்புகிறோம். சந்தேகங்களுக்கு விளக்கம் தருகிறோம். இந்தச் சேவையைப் பெற விரும்புபவர் தபால் செலவிற்கென ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாகம் ஒன்றுக்கு ரூ 20-00 அனுப்பவும். மேலும் தாங்கள் விரும்பும் தொகையை நன்கொடையாக அளிக்கலாம்.

ஸம்ஸ்க்ருத எஜுகேஷன் ஸொஸைடி,
98-99, லஸ்சர்ச் ரோடு,
சென்னை 600 004.

# ஸம்ஸ்கிருதத்தை எளிதில்
## கற்க எமது பாட நூல்கள்

| | | விலை ரூ. |
|---|---|---|
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா | | |
| 1—7 பாகங்கள் ஒவ்வொன்றும் | | 25.00 |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா | | |
| (ஆங்கிலம்) | முதல் பாகம் | 25.00 |
| | இரண்டாம் பாகம் | 30.00 |
| ஸம்ஸ்க்ருத அகராதி | | |
| தமிழ் - ஆங்கிலப் பொருளுடன் | | 120.00 |
| தாதுமாலா (300 தாதுக்கள்) (முதல் பாகம்) | | 80.00 |
| சப்தமஞ்ஜரீ | | 25.00 |
| அவ்யய கோசம் | | 100.00 |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ ஆண்டிதழ்கள் | | |
| 13 முதல் 21 வரை | | 15.00 |
| 22 முதல் 25 வரை | | 20.00 |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ வெள்ளிவிழா மலர் | | 20.00 |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ மாதப் பத்திரிகை | | 4.00 |
| ஆண்டு சந்தா | | 40.00 |
| ஆயுள் சந்தா | | 400.00 |

புத்தகம் அனுப்ப தபால் செலவு தனி
விவரமறிந்து முன் பணம் அனுப்பவும்

*தொடர்பு கொள்ள முகவரி :-*

**ஸம்ஸ்கிருத எஜுகேஷன் ஸொஸைடி,**
148-150, லஸ் சர்ச் ரோடு, மயிலாப்பூர், சென்னை - 600 004.

*Lasertypeset & Printed at :*
**V.K.N. ENTERPRISES,**
8/1, Dr. Rangachari Road, Mylapore, Chennai-4, ✆ 2495 0775.